# ஆசாரம்.

அன்பர்களே!

நாங்கள் அநுசரிக்கும் நற்செயல்களும் தீச்செயல்களும் ஆசாரம் என்று சொல்லப்படும், ஆசாரம், ஒழுக்கம், என்பன ஒருபொருளன. சைவசமயிகளாயுள்ளவர்கள் வேதாகமங்களில் விதித்தன புரிதலே நல்லொழுக்கமாகும். தீயன செய்தல் தீயொழுக்கமே யாகும். தீயொழுக்கங்களை யொழித்து நல்லொழுக்கமுடையராய் யாவரும் நடத்தல்வேண்டும். நல்லொழுக்கமே மேலானது, திருவள்ளுவநாய னாரும், 'ஒருவனுக்கு உயிரினும் பார்க்க மேம்பாடுடையதாகப் பாது காத்தற்குரியது ஒழுக்கமே' என்று வலியுறுத்தினார். அஃது. 'ஒழுக்கம் விழுப்பந்தரலா, னொழுக்கமுயிரினு மோம்பப்படும்' என்பதாம். மக்கட்பிறப்பினை யடைந்த ஆன்மாக்களே தீயொழுக்கத்தைப்பூண்டு உலகில் நடிப்பு மாத்திரையானே காலங்கழிப்பின், கேள்வியும் அரும் பெருங்கல்வியும் என்ற இவைகளுக்குரிய வகைப்பட்ட நூல்கள் மிருகங்களின் பொருட்டு இறைவனால் முன்னே அருளிச்செய்யப் பெற்றனவா? இல்லை! இல்லை!! மாநுடர் பொருட்டே வேதாகமாதி சமஸ்த சாஸ்திரங்களும் காலதேச பாத்திரங்களுக்கேற்றவாறு செய்தருளப்பட்டன. பரதகண்டத்தவர்களுக்கும் மற்றைத் தேசத்தவர்களுக்கும் எவ்வளவோ வேற்றுமையுண்டு. மனச்சாட்சியே ஒருவனுக்கு முக்கியமாக வேண்டியது. மனநீதிவிளக்கம் அறிவினாலமையும். ஆகவே அறிவினை மேனிலைப்படுத்தி நல்லொழுக்கத்தை நாடுதல் மாநுடர்க்கு மக்த்துவமாகும். தத்தம் வருண ஆச்சிரமங்களுக்குரிய ஒழுக்க மில்லாது போனால் ஒருவன் இழிந்தவனே யாவன். எவனிடத்து ஒழுக்கமும், சிவபக்தியு முண்டோ அவனே பரமயோக்கியன் 'நான் மகாயோக்கியன்' என்று உலகினரை எவன் ஏமாற்றுகின்றானோ அவனேபடிறன். படிற்றொழுக்க முடையோர் இக்கலியுகத்திற் பூசிக்கப் படுகின்றனர். உண்மைக்கு உயர்வும் பூச்சியதையும் உண்டாவது பேரருமையாக விருக்கின்றது, தர்ம்ம சிந்தையினும் அதர்ம்மவிருத்தி மூன்று பங்கு அதிகமாகிவிட்டது.

"பகிடிக்குப் பத்துக்காசு, திருப்பாட்டுக் கொருகாசு" என்னும் பழமொழி பழமொழியாய் விட்டது, இன்னும் அநேக தீங்குகளைப் பின்பற்றி நடப்போர் பலருளர், பொதுவகையானே யாவரும் நடக்க வேண்டிய நல்லொழுக்கங்களுட் சிலவற்றை இங்கே வரைவாம்.

ஒருவன் எந்த உயிரையுங் கொல்லலாகாது. அவைகளை வருத்ததலுங் கூடாது. ஒருவனிடத்தில் பிறரை அடுத்துக் கெடுக்கும் எண்ணம் கிஞ்சித்தும் இருத்தல் கூடாது. பிறருடைய துன்பத்தை நீக்கத் தன்னாலானமட்டும் பிரயாசைப்படுதல் வேண்டும், கோபத்தினாலே பாபச் செயல்களைச் செய்தலாகாது. பிதா, குரு முதலியோர்களை இகழ்ந்து பேசலாகாது. கடவுளையும், அடியார்களையும் பரிகாசம் பண்ணலாகாது, புறங்கூறலாகாது, பிறருடைய கல்வி

செல்வங்களையும் பிறவற்றையும் நோக்கிப் பொறாமையடைதல் கூடாது, கடுஞ்சொற்களைச் சொல்லுதல் கூடாது. பிறர்பொருளை மண்ணாங்கட்டி எனவும், பிறர் மனைவியரைப் பெற்றதாயரெனவும் மதித்தல் வேண்டும். நாடோறும் சூரியோதயத்திற்கு ஐந்துநாழிகை முன்னே நித்திரை விட்டெழுந்து இயன்ற சுத்தி செய்து கொண்டு கடவுளை வழிபட்டுப் பின் உரிய கருமங்களைப் பார்த்தல் வேண்டும். கடவுளுக்குச் சாந்நித்திய ஸ்தானமான ஆலயங்களிலே தினந்தோறும் போய் வணக்கஞ் செய்தல் வேண்டும். இங்ஙனம் செய்தல் கூடாதாயின் விசேட காலங்களிலாயினும் சுவாமி தரிசனஞ்செய்தல் வேண்டும். சிவதீக்ஷை பெற்றுச் சந்த்யாவந்தனத்துடன் வேதம், தமிழ்வேதம் முதலியவற்றுள்ள தத்தம் வருணத்திற் கேற்ற வற்றையும் இந்துக்களாயுள்ளோர் பாராயணஞ் செய்தல் வேண்டும். 'ஆலயம், வித்தியாசாலை, திருமடம், திருநந்தனவனம் ஆகியவற்றிற்கு வேண்டிய உதவிகளை மனோலாக்குக் காயங்களினாலே செய்தல் வேண்டும், 'படிப்பது தேவாரம் இடிப்பது சிவாலயம்' என்றபடி நடப்பது மிகுபாவமாகும்.

கடவுளும், திருவருளும், சுவர்க்கதரகங்களும் உள்ளன என்பதை பாறுத்தலாகாது, செல்வச்செருக்கினாலும், ஆணவமல முகிழ்ப்பினாலும் மயங்கிக் கடவுளையும், கலைஞாநங்களையும் இகழ்ந்து இப்போது கிடைத்த போருமைவாய்ந்த மனிதப்பிறப்பினாலடைய வேண்டிய நற்பயனை வியர்த்தமாக்கலாகாது. இவைகளை நம்மனோர் சிந்தித்தல் வேண்டும், சிலர் ஓ! கடவுளைக் கண்டது யார்? என்கின்றார்கள். சிலர் கொலையினாலாய புன்புலாலை உண்டு நாக்குத் தடிப்புற்றுச் சாஸ்திர விரோதமான நிந்தைகளைக் கூறி மனத்திடஞ்செய்து தம்மை அடுத்தவரையும் கெடுக்கின்றார்கள். இறத்தல் வாஸ்தவம் என்று தோன்றும்போது ஆ! இப்பாதகர்கள் கொடு மொழி கூறாதிருத்தலன்றோ' புக்தியாகும்! விபூதியை அடுக்கடுக்காப் பூசிக்கொண்டும், கண்மணி' யனைய உருத்திரநன்மணியைப் பூண்டுகொண்டும் சிறிது மஞ்சாது தேகபோஷணைக்காக ஊனையுண்டு, ஐயையோ! கெடுதல் என்ன மதியீனம். புண்ணிய வசத்தினாலே கிடைத்த பிறவி இது என்று கூறிய மகாஞாநிகள் கருத்தைச் சற்றுவது கவனிக்கவேண்டாமா? அகங்கார மமகாரங்களாகிய அந்தகாரத்துட்டினைத்து நிற்கும் போது ஜ்ஞானவ' ரோதவமுடையே மென்றல்சாலுவதா? இனிய செல்லுடன் கனியும் 'மனமுடையராய்ச் சிவ பரம்பொருளைச் சிந்தித்து நல்லொழுக்கியலுடன் யாவரும் வாழத் திருவருளுண்டாவதாக. சுபமஸ்து.

## பட்டினத்தடிகள்.

ஒன்றென்றிரு தெய்வ முண்டென்றிரு வுயர் செல்வமெல்லா
மன்றென்றிரு பசித்தோர் முகம்பார் நல்லறமு நட்பும்
நன்றென்றிரு நடு நீங்காமலே நமக்கிட்டபடி
யென்றென்றிரு மனமே! யுனக்கே யுபதேசமிதே.

## (வேறு செய்யுள்)

ஆற்றுமின் னருள் ஆருயிர் மாட்டெலாம்
நூற்று மின்னறந் தோநனி துன்னன்மின்
மாற்றுமுன் கழியாயமு மானமும்
போற்றுமின் பொருளாவிவை கொண்டு நீர்.

இங்ஙனம்,
வ. மு. இரத்திநேசுவர அய்யர்,
தமிழ்ப்பண்டிதர்.

சித்தாந்தம் - 1914 ஆ - ஜூலை மீ